22nd September 1961]

2 குறைத்தோம். 3–ஐ ஏற்றுக்கொள்ளுகிறோம் என்று கொஞ்சம் சமாதானப்படுத்தும் அளவுக்கு இருக்கிறது. உதாரணத்திற்கு எம்.எல்.ஏக்களுக்கு இங்கே ஆரம்பிக்கப்பட்டிருக்கிற கீதா காண்டீனில் காப்பி 20 நயா பைஸாவிற்கு விற்கப்படுகிறது. அதே நேரத்தில் செக்ரட்டேரியட் எம்ப்ளாயீஸ் காண்டீனில் 12 நயா பைஸாதான். அவர்களுக்குக் கொடுத்தால் 15 நயா பைஸா ஆக்கினாலும் இன்னும் நன்றாக இருக்கும். இப்போது இருப்பதை விட சீப்பாக இருக்கும். ஒவ்வொரு ஹோட்டல்களையும் பார்த்தோம், ஏதோ குறைத்தோம் என்று சொல்லுவது சரியல்ல. கொள்ளை லாபம் அடிக்கும் நிலை இருக்கிறதே அதைப் பரிபூரணமாகப் போக்க என்ன நடவடிக்கை எடுக்கப்படும் என்று தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நான் முன்பே சொன்னேன், ஓரளவுக்கு உயர்ந்திருக்கிறது என்றால் நியாயம் இருக்கிறது. விலைவாசிகள் உயர்ந்திருக்கிறது. மொத்தத்தில் எல்லா விலைவாசிகளும் உயர்ந்திருக்கிறது. அதிகமாக, அக்கிரமமாக ஏறுவதைத் தடுக்கலாம். ஏதோ உடன்பாடு செய்தோம் என்று நினைப்பது தவறு. மற்றும் காண்டீன் கொடுப்பது பற்றியது ஹவுஸ் கமிட்டி விஷயம். அதைப் பற்றி கனம் உதவி சபாநாயகரிடத்தில் சொல்லலாம்.

*Sub-way near Central Station*

* 1716 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

செண்ட்ரல் ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் கீழ்ப்பாதை (Sub-way) ஒன்று கட்டும் உத்தேசம் ஏதேனும் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Yes, Sir.

SRI N. R. THIAGARAJAN : ஸார், கனம் உதவி அமைச்சர் ஸ்ரீ எஸ். வி. ராமசாமி இங்கு வந்தபோதெல்லாம், ஒரு முறை ரெயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரம் வரை சப்–வே போட இருப்பதாகக் கூறினார். பின் ஒரு முறை செண்ட்ரல் ஸ்டேஷனுக்கும், எக்மோர் ஸ்டேஷனுக்கும் நேரடி ரெயில்வே தொடர்பு அமைக்க ஏற்பாடு செய்துகொண்டிருப்பதாகக் கூறினார்கள். பின்னொருமுறை செண்ட்ரல் ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் சப்–வே ஒன்று போட இருப்பதாகக் கூறினார்களே, இதிலே எந்தெந்தத் திட்டங்கள் அமுல் நடத்துவதாக இருக்கிறது என்பதை விளக்கமாகக் கூற முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவ்வாறு ஒரு கேள்வியை கனம் அங்கத்தினர் அவர்கள் இங்கு போடுவதைவிட, ஒரு எம்.பி. மூலம் பார்லிமெண்டிலே கேட்கலாம். ஆனால் இங்கே என்னிடம் தகவல் இருப்பது என்னவென்றால், ரவுண்ட் டாணா, செண்ட்ரல் ஸ்டேஷன், மூர்மார்க்கெட் போன்ற இடங்களில் சப்–வே அமைப்பதற்காகத் திட்டங்கள் போடப்பட்டு, சென்ற ஆண்டே ரவுண்ட் டாணா ஸ்கீமிற்காக ஒரு லட்சம் ஒதுக்கினோம். ஆனால் நகரசபை நேரத்திலே அப்ளிகேஷன் போடாததால், அந்தப் பணம் லாப்ஸாகிவிட்டது. இந்த வருஷம் ஒரு லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்போது செண்ட்ரல் ஸ்டேஷன் ஸ்கீமை எடுத்துக்கொள்ளப் போகிறோம்.

SRI A. A. RASHEED : Since there is a long delay in the construction of sub-ways both in Round Thana and near Central Station, will the Government themselves acquire the lands and construct the sub-ways instead of leaving it to the Corporation of Madras?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not think that is necessary. I hope the Corporation will take prompt action by fully taking advantage of the funds that are made available and expediting the construction of the sub-ways.

[22nd September 1961

SRI R. SRINIVASA IYER : ஸார், இந்த ரவுண்ட் டாணவுக்குக் கட்டப்போகிற சப்-வே ஸ்கீம் ஏறக்குறைய 3 வருஷங்களாக பேசப்பட்டு வருகிறது. இந்தத் தடவை பணம் ஒதுக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இந்தத் தடவையாவது கார்ப்பரேஷன் அப்ளிகேஷன் அனுப்பி விட்டதா ? பிளான், எஸ்டிமேட் எல்லாம் அனுப்பப்பட்டதா ? அப்படியாயின், இந்தத் தடவையாவது இந்த ஸ்கீமை ஆரம்பிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்ளிகேஷன் போன வருஷத்திலேயே வந்து விட்டது என்று சொன்னேன். இந்த ஆண்டில் வேலை எடுத்துக் கொள்ளப்படும் என்றுதான் நான் நம்புகிறேன்.

### *Rural population—Migration to other States*

* 1717 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலிருந்து கிராமப்புற மக்கள் பிற மாநிலங்களுக்கும் பிற நாடுகளுக்கும் வெளியேறிச் செல்வது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா ?

(இ) அப்படியானல், அதைப் போக்க சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) There have been reports about illicit emigration to Ceylon of persons from the coastal districts of this State. There has been no report about large scale migration to other States of this country.

(*b*) Illicit emigration has already been banned by Government of India. The Government have tightened up the existing preventive measures to check illicit emigration to Ceylon. Wide publicity in the press and over the All-India Radio has been and is being given about the evils of illicit emigration.

SRI S. M. ANNAMALAI : சிலோன் போன்ற பிற நாடுகளுக்கு மக்கள் செல்வதின் முக்கியமான காரணம், வறுமையினல் என்பதும், அதேபோல் வேலை இல்லாத் திண்டாட்டத்தினல் என்பதும் சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படியானல், இவர்களுடைய அவல நிலையைப் போக்குவதற்கு, நம் நாட்டிலே நல்ல வேலை வாய்ப்புத் தருவதற்குத் திட்டங்கள் தீட்ட இந்தச் சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிலோனுக்கு நாங்கள் திருட்டுத்தனமாகத்தான் போவோம் என்று பயமுறுத்துவதில் பிரயோஜனமில்லை. எல்லோருடைய வாழ்க்கை நிலைமையும் உயர்த்துவதற்கான திட்டங்கள் போடப்பட்டு, அவைகள் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

### *Fair Price Shops*

* 1718 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to place a statement on the table of the House, showing the number of Fair Price Shops, and the quantities of rice sold through them, in each district from January to June 1961, monthwar?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] giving the required information is placed on the table of the House.

[a] Printed as appendix III on page 507 infra.